## திரிகடுகம் - பதினெண் கீழ்க்கணக்கு



- திரிகடுகம் என்பது சுக்கு, மிளகு திப்பிலி என்னும் மூன்று மருந்துப் பொருளை குறிக்கும்.
- மூன்று மருந்துப் பண்டங்களால் ஆகிய திரிகடுகம் என்னும் மருந்து உடல் நலம் பேணுவதைப் போன்று, இந்நூற் செய்யுட்களில் மும்மூன்றாக உரைக்கப் பெற்ற அறங்களும் உயிர் நலம் பேணுவனவாம்.
- இதனாலேயே இந்நூல் திரிகடுகம் எனப் பெயர் பெற்றது. இதன் ஆசிரியர் நல்லாதனார்.



### 1. நன்மை தராதது எது?

**கணக்காயர் இல்லாத ஊரும், பிணக்கு அறுக்கும்**
**மூத்தோரை இல்லா அவைக் களனும், பாத்து உ ண்ணாத்**
**தன்மையிலாளர் அயல் இருப்பும், - இம் மூன்றும்**
**நன்மை பயத்தல் இல.**

1. கற்பிக்க இயலாதவர் ஊரிலிருத்தலும்,
2. கல்வி கேள்விகளில் முதிர்ந்தவர் இல்லாத சபையும்,
3. பகுத்து உண்ணும் தன்மை இல்லாதவர் பக்கத்தில் இருத்தலும் ஒருவருக்கு நன்மை தராது.

# திரிகடுகம்

## 2. யாருடன் நட்பு கொள்ள வேண்டும்?

**தாளாளன் என்பான் கடன் படா வாழ்பவன்;**
**வேளாளன் என்பான் விருந்து இருக்க உண்ணாதான்;**
**கோளாளன் என்பான் மறவாதான்; - இம் மூவர்**
**கேள் ஆக வாழ்தல் இனிது.** 12

1. கடன்படாது வாழ்வான் (முயற்சியுடையவன்).
2. விருந்தினர் பசித்திருக்க உண்ணாதவன் (உதவி செய்பவன்).
3. கேட்டவற்றை மறவாதவன். (பிறர் காரியங்களை அறிபவன்)
   இம்மூவருடனும் நட்பு கொள்ளுதல் நன்மை தருவதாகும்.

## 3. பெறுவதற்கு அரியவை எவை?

**சீலம் அறிவான் இளங்கிளை; சாலக்**
**குடி ஓம்ப வல்லான் அரசன்; வடு இன்றி**
**மாண்ட குணத்தான் தவசி; - என மூவர்**
**யாண்டும் பெறற்கு அரியார்.**
13

1. பிறர் குணம் அறிந்து நடக்கும் உறவினன்,
2. குடிகளைக் காக்கும் அரசன்,
3. சிறந்த துறவி

   இம்மூவரும் பெறுதற்கு அரியர் ஆவார்

## 4. நட்புக் கொள்ள தகாதவர் யார்?

**பொய் வழங்கி வாழும் பொறியறையும், கை திரிந்து**
**தாழ்விடத்து நேர் கருதும் தட்டையும், ஊழினால்**
**ஒட்டி வினை நலம் பார்ப்பானும், - இம் மூவர்**
**நட்கப் படாஅதவர்.** 15

1. பொய் பேசி வாழும் செல்வந்தன்,
2. தனக்கு மேலானவன் தாழ்ந்த போது போற்றாதவன்,
3. விதியால் நண்பன் துன்பப்படும்போது பயனை எதிர்பார்ப்பவன்,
   இம்மூவரும் யாராலும் நட்பு கொள்ளத் தகாதவராவார்.

## 5. செல்வம் உடைக்கும் படை எது?

**தன்னை வியந்து தருக்கலும் தாழ்வு இன்றிக்
கொன்னே வெகுளி பெருக்கலும், முன்னிய
பல் பொருள் வெஃகுஞ் சிறுமையும், - இம் மூன்றும்
செல்வம் உடைக்கும் படை.**



1. தன்னைத் தானே வியந்து போற்றுதலும்,
2. அடக்கமில்லாமல் சினம் கொள்ளுதலும்,
3. பலவகைப் பொருட்களை விரும்புகின்ற சிறுமையும்,
   இம்மூன்றும் செல்வத்தை அழிக்கும் படைகளாகும்.